(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) The details of the scheme have not yet been finished by the Government of India.

SRI A. A. RASHEED : May I know, Sir, the nature of the national service the students are required to do.

THE HON. SRI C. SUBRAMANIAM : The scheme has not yet been finalised. I am unable to give the details.

**SRI M. KALYANASUNDARAM:** நமது அரசாங்கத்தை அபிப்பிராயம் கேட்டார்களா? நமது அரசாங்கம் என்ன அபிப்பிராயம் தெரிவித்தார்கள்?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** அபிப்பிராயம் கேட்டிருக்கிறார்கள். இன்னும் தெரிவிக்கவில்லை.

SRI A. A. RASHEED : May I know, Sir, whether this National service is compulsory for even girl students?

MR. SPEAKER : What is the point in the hon. Member asking this question when the hon. Minister has said that the scheme has not yet been finalised.

*Smallpox*

**49 *Q.*—SRI M. P. SARATHI:** கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) சமீபத்தில் இந்த ராஜ்யத்தில் அம்மை வியாதி பரவலாகக் கண்டிருந்ததா?

(ஆ) அதைக் கட்டுப்படுத்தவும், தடுக்கவும் மேற்கொண்ட நடவடிக்கைகள் என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) There was no widespread prevalence of small-pox in the State. Only sporadic cases were reported.

(ஆ) Mass vaccination and re-vaccination drives, disinfection of the affected premises and materials, and isolation of cases in the Infectious Diseases Hospitals or sheds or Home segregation wherever feasible have been carried out. Health Education of the public in regard to the mode and spread of small-pox and the preventive measures to be taken have also been done in the affected areas.

**SRI S. M. ANNAMALAI:** ஸார், மலேரியா போன்ற வியாதிகளை முழுதும் ஒழிக்க சர்க்காரிடத்தில் திட்டம் இருக்கிறது. அதே போன்று வைசூரியை ஒழிக்க சர்க்காரிடத்தில் திட்டம் இருக்கிறதா? அப்படியானால் அதன் விவரம் என்ன?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** நல்ல திட்டம் இருக்கிறது. சில வருஷங்களிலே வைசூரியை நம் நாட்டிலேயே

9th August 1960]

இல்லாமல் செய்வதற்குத் திட்டம் இருக்கிறது. அதற்காக "பைலட் ஸ்கீம்" செங்கற்பட்டு ஜில்லாவில் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

**SRI M. K. SOMASUNDARAM:** ஸார், செங்கற்பட்டு ஜில்லாவில் "பைலட் ஸ்கீம்" நடந்து வருவதாகத் தெரிகிறது. அதற்கு எத்தனை பேர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். தாவாரியாகச் சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்

**THE HON. SRI M. A. MANICKAVELU:** அதற்கு, அதிகமாக "வாக்ஸினேஷன்" செய்ய சிப்பந்திகள் வேண்டும். அதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது—பயிற்சி கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆக, பைலட் ஸ்கீமுக்கு வேண்டிய ஆட்கள் இருக்கிறார்கள்.

**SRI A. VEDARATHNAM:** ஸார், இப்போது போட்டிருக்கும் திட்டப்படி அம்மை நோயை இந்த நாட்டிலிருந்து அறவே ஒழிக்க எத்தனை ஆண்டுகள் பிடிக்கும்?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** இதிலே அரசாங்க சிப்பந்திகள் போதுமான ஆர்வம் காட்டி, பொது மக்களும் ஒத்துழைத்தால் சில வருஷங்களிலேயே ஒழித்து விடலாம் என்று நினைக்கிறேன்.

**SRI K. B. S. MANI:** சர்க்காரினால் இந்த வைசூரி நோயை ஒழிக்க கொடுக்கப்பட்ட பயிற்சி மருந்துகள் மூலமாகவா, அல்லது மந்திரங்கள், மாரியம்மன் தாலாட்டு போன்றவைகள் மூலமாகவா?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** மந்திரத்தினாலெல்லாம் இது படியாது. "வாக்ஸினேஷன்" செய்யவேண்டும். அதைத்தான் செய்கிறோம்.

**SRI A. GOVINDASAMI:** இந்த அம்மை நோய் உண்டாக முக்கிய காரணம் என்ன?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** இந்தக் கேள்விக்கு கனம் சபாநாயகர் அவர்கள் தான் பதில் சொல்லவேண்டும். (சிரிப்பு.)

**MR. SPEAKER:** நான் இங்கே பதில் சொல்ல முடியாதே! (சிரிப்பு.)

SRI A. A. RASHEED: May I know, Sir, whether the Government have received any aid from the World Health Organization to eradicate this disease from our State?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** மலேரியா ஒழிப்புத் திட்டத்திற்கு வெளி நாட்டு உதவி இருக்கிறது. வைசூரி நோய் விஷயத்தில் மத்திய சர்க்கார் முழுப் பொறுப்பையும் எடுத்திருக்கிறார்கள். அவர்கள்தான் செலவிற்கு ஆகும் தொகையைக் கொடுக்கிறார்கள். வெளி நாட்டிலிருந்து உதவி இனிமேல் வந்தாலும் வரலாம்.